ஓம்:

# திருப்பரங்குன்றம் விசேட விளக்கம்.



## உடன்பிறந்தார் ஒற்றுமை



## மூர்த்திகளின் அமைப்பு



## வெளித்தராசு-உள்தராசு.



## தீர்த்தமாடும் முறை-ஜபம்

---

திருத்தேவர் பழநியப்பக்கவுண்டர்,
ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர் ஆதீன வித்வான்,
சமய விரிவுரையாளர்- உபயகலாநிதி.

மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலை ஆசிரியர்

திரு. சு. நல்லசிவன் பிள்ளை அவர்கள்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்

விண்ணார் திருப்பரங் குன்ற விசேட விளக்கமெனும்
மண்ணோர்க் கொருகத் தியநூலை ஈண்டு வரைந்தனனால்
எண்ணாரும் போற்று மிவன்யாவ னென்னி லிசைத்திடுவ
பண்ணாருஞ் செந்தமிழ்ப் பாவாணர்க் கன்பு படைத்தவனே.

திருத்தேவ ரென்னு மிருமொழிச் செல்வன் றிகாந்தத்துந்தன்
மருத்தே நிகர்புகழ் மல்கப் பிரசங்க மாரிபெய்வோன்
கருத்தேய முக்கட் கடவுட் பிரான்பொற் கழல்பணிவோன்
தருத்தேவர் நாட்டுந் தமிழ்ப்பயி ரோங்கச்செய் தண்முகிலே.

மீனாட்சி சுந்தரர் கோயிற் றிருப்பணி மேற்கொண்டருள்
தானாட்சி செய்யுந் தமிழ்ப்பிர சாரகன் றந்தவிந்நூல்
வானாட்சி செய்யும் புலவோருங் கண்டு மகிழ்வரெனில்
தேனாட்சி செய்யிவ னாற்றன்மை யாணிங்குச் செப்பவென்னே.

அரன்வே றரிவே றெனான்மது ரைச்சொக்க ராலயத்தின்
வரனார்ந்த வாதீன வித்துவான் சொற்பொழி வாற்றிடுநற்
பிரனார் பழநியப் பப்பா வலனினுந் திண்புவிக்குப்
பரனா ருவக்கும்பன் னூலீந்து வாழியிப் பார்மிசையே.

———

திருப்பரங்குன்றம் கூட்டுறவு யூனியன் தலைவரும்,
பெருநிலக்கிழாரும், சிறைசென்ற அரசியல் தியாகியும்,
தமிழ் விரிவுரையாளருமான, திருப்பரங்குன்றம்,

திருவாளர் டி. கே. நாவலர் அவர்கள் இயற்றியது

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி வழங்கும்
செந்தமிழ் நாட்டில் முந்தையோர் முறைப்படி
மங்காப் புகழுடைக் கங்கையாள் மரபில்

வாழ்ந்த நாடு வளமிகு நாடு
கொங்கு நாடு கோயம் புத்தூர்
நகரை யடுத்த திருவேட செந்தூர்
வேள்பாரி ஓரி காரி முதலிய

பழமைக் குடியில் பண்பாய்த் தோன்றிய
மேழிக் கையன் கோழையில் செல்வன்
வடமொழி தென்மொழி கடற்கரை கண்டவன்
தாழ்ந்தோர் தமக்குத் தாழநின் றுரைப்பவன்

உயர்ந்தோர் தமக்கும் ஒத்துநின் றுழைப்பவன்
விரிவுரை யாளர் விருந்தில் நெல்லையில்
முதலாத் தேறி முத்தமிழ் மதுரைக்கு
இனிதாம் புலவ னென்னவே வந்தனன்

வித்துவக் காச்சல் எத்துணை யும்இலன்
யாரையும் அணைக்கும் பேரறி வாளன்
திருத்தேவ ரென்னும் சீரிய பெயரோன்
பரங்கிரி நாதனைப் பார்த்தந்த மூர்த்திகள்

அமைந்த முறையினை அன்போடு கண்டு
குடும்பம் வாழக் கூடிய முறைகளும்
மூர்த்தி தீர்த்தம் தலம்வழி படல்குகன்
திருவுரு வத்தைத் தியானிக்கு முறையும்

உள்ளத் தராசும் வெளித்த ராசும்
நாடொப் பதுவாய் நன்றாய் முடித்தனன்
ஆதலின் இந்நூல் அனைவரும் கற்று
ஓதுக உலகம் உய்கவென் னுளுமே!

## சிறப்புரை

திருப்பரங்குன்றம் என்றும் சலியாது நிற்கும் பெருமையுடையது. சிவபெருமானும், முருகனும், திருமாலும் ஆண்டுத் திருக்கோவில்கொண் டெழுந்தருளி ஆன்மாக்கட்கு அருள்பாலிக்கின்றனர். இத்திருநகரின் பெருமை அளத்தற்கரியது. இத்தலத்தின் மாட்சியும், அதன்கணுளதாய மூர்த்தியின் பெருமையும், தீர்த்தத்தின் சிறப்பும் விளக்கப்பட்டுள்ளன. குடும்ப வாழ்க்கைக் காமாறும் அமைக்கப்பட்டிருக்கிறது.

கடவுட்பற்று அருகிவரு மிக்காலத்து, கடவுட் பற்றினை மக்கள் உள்ளத்து நாட்டி மலர்விப்பதற்கு இந்நூல் பெருந்துணை புரியும். இதனை ஆக்கித் தந்த இருமொழிப் புலவர் திரு. திருத்தேவர் பழனியப்பக் கவுண்டர் அவர்கள் பரமாத்வைத சித்தாந்தம் முதலாக முன்னும் பல நூல்களை ஆக்கியுள்ளார். இன்னும் பல நூல்களை ஆக்கித் தமிழுலகத்திற்குத் தருவார்களாக.

இங்ஙனம்,

ஆ. சு. கந்தசாமி முதலியார், B. A.,

வழக்கறிஞர்,

வைதிக சைவ சித்தாந்தக் கல்விக்களஞ்சியம்,

சாத்தூர்.

---

# மதிப்புரை

"அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்கு இவ்வுலக மில்லாகி யாங்கு"-என்னும் திருக்குறளுக்கேற்ப இரண்டுலகத்துக்கும் ஆசிரியர் இந்நூலில் சொல்லியிருப்பதைக்கண்டு மகிழ்கின்றோம்.

முதலாவது குடும்ப வாழ்விற்குண்டான முறைமையும், அதிலுள்ள அண்ணந் தம்பி ஒற்றுமை, சம்பந்திக் குடிகள் ஒற்றுமை, காரியங்களை நிறுத்துப்பார்த்து வேலை செய்யத் தராசு முதலியன உண்டு.

இரண்டாவது பஞ்சாக்கரஜெபம், பொறிபுலனடங்கி மூர்த்தி வழிபாடு முதலியன செய்தல், முருகனை உள்ள மென்னும் காகிதத்தில் அன்பென்னும் மை தடவிப் போட்டா பிடிக்கும்விதம் முதலியன, எளிதில் பண்டித பாமரரனைவரும் விரும்பும் முறையில் இருப்பது, காலத்திற் கேற்ற முறையில் தமிழர்க்குப் பேருபகாரமாகும்.

பல அத்தியாயங்கொண்டு விரிந்த தலபுராணத்தைச் சுருக்கி உலகோபகாரமாம்படி இம்முறையில் விளக்கிய நூல் இதுவே முதலாயிருக்கும் என்றும் அறிகின்றோம்.

மாஸ்டர் ராமையா பிள்ளை,
7-வது வார்டு,
மதுரை.

க. செல்லையா,
சிவராஜ யோகி,
மதுரை.

## கந்தப்புராணப் புகழ் : : : : எந்தப் புராணத்தும் இல்லை

மஹாபாரதத்தில் கதைமுடிவில் பீமனால் அடிபட்டு துரியோதனன் விழுந்தான் என்றால் உடனே மடிந்தான் என்று கேள்விப்படுகிறோம். அவன் எழுந்தகதை கேட்டதில்லை. அப்படியே ராவணன் பாணப்பட்டு இறுதியாய் விழுந்தான் என்றால் மடிந்தான்—செத்துத் தொலைந்தான் என்று ராமாயணத்தில் கேள்விப்படுகிறார்களே யன்றி அவன் எழுந்து பிழைத்த கதையை உலகம் கேட்டதில்லை.

கந்தப்புராணத்திலோ கதை முடிவில் சூரபத்மன் வேல்பட்டு விழுந்தான் என்றால் உடனே எழுந்தான் என்று கேள்விப்படுகிறோம். மடிந்தான்—தொலைந்தான் என்ற கேள்வியில்லை. மேலும் எழுந்தவன் மீண்டும், எப்படியோ கெட்டுப்போனான் என்பதும் இல்லை. ஒரு நல்ல சிறந்த பொருளில் மேலும் கீழும் இடம்பெற்று விளங்குகின்றான். கதை முடிவில் இத்தகைய அமைப்பை நாம் எங்கு காணமுடியும்? சேவலும் மயிலுமாய் முருகனுக்கு மேலும் கீழும் விளங்கி ஒன்றுக்கு இரண்டுமாய் அழியாப் பெரும்பேறுபெற்று விளங்குவதை இன்றும் காதாலும் கண்ணாலும் கேட்கிறோம் பார்க்கிறோமல்லவா?

இதைக் கதையின் பெருமைக்காக மாத்திரம் நாம் எடுத்துச்சொல்லவில்லை. காந்தி சகாப்தத்திற்கேற்ப அஹிம்ஸா தத்துவம் இதில் தலைசிறந்து விளங்குவதைக் கண்டே இதைப் பிறருக்கும் எடுத்துக்காட்ட அவாக் கொண்டு சொல்ல விரும்பினோம்.

மிகக் கொடியர்களையும் கொன்று கொலைத்துவிடாமல் பக்குவப்படுத்தித் திருத்தியாளும்முறை (காந்தியடிகளின்) அஹிம்ஸா தத்துவத்தின் ஒரு சிறந்த பகுதியாகும்.

இந்த அஹிம்ஸாமுறை உண்மையில் புகழ்பெற வேண்டியதாயிருத்தலினாற்றான் முன்பே இவ்வாறு "கந்தப்புராணப் புகழ் (பொருள்) எந்தப் புராணத்திலும் இல்லை" என்று பழமொழியாய்ச் சொல்லிவந்தார்கள் போலும்.

முருகனது இயல்பும், அவன் மக்களைத் திருத்தி யமைக்கும் அஹிம்ஸாதத்துவமும் "தனித்தமிழ்மந்திரம்" என்னும் நூலில் போதிய அளவுக்கு விளக்கிச் சொல்லப் பட்டிருக்கின்றன. மற்றவைகளுக்கும் இவைகளுக்கும் இருக்கும் தாரதம்மியத்தை அறிய விரும்புவோர் அந் நூலில் காணலாம்.

—ஆசிரியர்.

---

மதுரை ஸ்ரீராம் பிரஸ் சொந்தக்காரர்

## ரா. அழகர்சாமி இயற்றியது

திருப்பரங் குன்றச் சிறப்பைத் தமிழில்
விருப்பமோ டின்று விளம்புந்—திருத்தேவ
ரென்னும் பழனியப்ப னேற்ற திறனைக்கண்
டின்னும் புகழ்வோ மிசைந்து.

---

## முகவுரை

ஆதிகாலந் தொட்டு நமக்குத் தெரிந்ததிலிருந்தே இந்த மூர்த்தி முதலியவற்றின் வழிபாட்டை நம் முன்னோர்கள் ஒத்துக்கொண்டதோ டன்றியும் வற்புறுத்தியும் வந்திருக்கிறார்கள். "ஆலயந் தொழுவது சாலவும் நன்று, கற்றதனால் ஆய பயனென்கொல்; வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின், புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டு பூமாலை புனைந்தேத்தி, மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கி னோர்க்கு" என்று பல ஆயிரம் தடவை பல பெருமக்கள் சொல்லியிருக்கிறார்கள். உண்மையில் இவர்களெல்லாம் தம் பின்வரும் சந்ததிகளின் நலனைக் கருதியே மற்றவற்றைப்போல இவற்றையும் சொல்லியிருக்கிறார்கள்.

"உடம்புதான் மனிதன்; அது ஒழிந்தால் மனிதனும் தீர்ந்தான், அப்புறம் முன்னுமில்லை பின்னுமில்லை" என்பது வாஸ்தவமானால் இவ்வளவு தூரம் ஔவை முதலிய பெருமக்கள் கட்டாயம் சொல்லியிருக்கவேமாட்டார்கள். மனிதன் உடம்போடு சரி என்றால் உண்மையில் இவன் பாடும் உணவோடு சரி என்றுதான் முடியும். அப்போது மிருகத்திற்கும் இவனுக்கும் எந்தவித வேற்றுமையும் காணமுடியாது. இல்லை! அது குனிந்து நடக்கிறது. இவன் நிமிர்ந்து நடக்கின்றான் என்றால்—சரி, நல்லது. அந்த அளவு வேற்றுமையுள்ள மிருகம் என்று வைத்துக் கொள்ள வேண்டியதுதான். ஏனென்றால் மிருகத்திலும் பலவிதம் இருக்கின்றதல்லவா? அதில் இது ஒருவிதம் என்று வைக்கவேண்டியதாக முடியும்.

உடம்புக்கு வேருக அதனுள் உயிர் இருக்கின்ற தென்ருல் உண்மையில் உழைப்பைப் பகிர்ந்துகொள்ள வேண்டியதுதான். குறைந்தபக்ஷம் ஒருநாளில் பாதிநாள் உடலுக்கு உறுதிதரும் உணவுக்காகவும், பாதிநாள் உயிருக்கு உறுதிதரும் உணர்வுக்காகவும் உழைக்கவேண்டியது மனிதனுக்கு அவசியமாகும். இந்தக் குறைந்த பக்ஷமான பாதி உழைப்பை அஸ்திவாரமாகக் கொண்டு தான் அறம் முதலியனவும் வழிபாடு முதலியனவும் மனித வாழ்வில் தொடங்கப்படுகின்றன.

சித்திரம் காட்டவேண்டியது ஒரு புலவனுக்கு அவசியம் என்பதானுல் அதை யாதானுமொரு காகிதமோ துணியோ மரமோ சுவரோ ஒன்றைத் துணையாகக்கொண்டு தான் அதில் வரைந்தோ சித்திரித்தோ காட்டவேண்டியிருக்கிறது. அப்படியின்றி அது அமைவதில்லை. அது போல அறம் பொரு ளின்ப வீடாகிய சித்திரங்களை முன் நிகழ்ந்த சரிதங்களைச் சுவர்களாகக் கொண்டு பின்வரும் தமது சந்ததிகளுக்கு முன்மக்கள் எழுதி வைத்தனர். இதில் காலத்திற்கேற்ப அவ்வப்போது சித்திரங்களைப் புதுக்கியும் திருத்தியும் அமைத்திருக்கிருர்கள்.

பின்வரும் மக்கள் சித்திரங்களைக் கண்டு அறிவு பெற வேண்டியிருக்கின்றது. அப்படியே தொடர்ச்சியாய்ப் பலர் பெற்றும் வருகின்ருர்கள். சில பிள்ளைகள் சித்திரக்கண்ணின்றி சிறிது மூடமடைந்து கடப்பாரையும் கொழுவும் கொண்டு சித்திரத்தைத் தோண்டிப் பார்க்கிருர்கள். ஐயோ பாவம்! இவ்வாறு பார்த்தால் கல்லும் மண்ணும்

சுண்ணும்பும் தவிர அங்கு வேறு என்ன காணப் போகிறூர்கள்? இவர்களால் சித்திரமும் போயிற்று, சுவரும் போயிற்று—என்ற நிலேதான் உண்மையில் வந்துசேரும். இவனுக்கு உபயோகமில்லே என்றுலும் இடிக்காமல் சும்மா விட்டாலும் போதுமானது. கழுதையும் ஆடு குட்டிகளும் காற்று மழைக்கு அதில் ஒதுங்கும். உண்மையில் நம் முன்னேர்கள் கட்டின கட்டிடம் எதுவும் பலருக்கும் பலவிதத்தும் பயன்படுவதா யமைந்திருக்கும்.

புராணக் கதைகளும் உண்மையில் இப்படியேதான். இதைச் சுவராகக் கொண்டு நல்ல பல சித்திரங்களே மக்களுக்கெனச் சித்திரித்திருக்கிறூர்கள். சுவர் எப்படியிருந்தாலும் அதில் அமைத்த சித்திரம் காலத்திற்கேற்ப மிக அழகாகவும் அவசியமாகவுந்தான் இருக்கின்றது. மேலும் அந்த அந்தக் கதைகள், தானே எழுந்து உலகத்தில் நடமாடவில்லே. அதை எடுத்து நாவென்னும் சாட்டை கொண்டு மண்ணுள்ளவரையும் ஓயாது நேர்மையில் ஆடும்படி கூர்த்த நுண்மதிப் புலமையாங் கரத்தால் ஓரே வீச்சில் ஆடவைக்கும் புலவர்பெருமக்கள் பலரிருக்கிறூர்கள். புகழேந்தி, ஒட்டக்கூத்தர், கம்பர், திருத்தக்கதேவர், இளங்கோவன், அதிவீரராமபாண்டியன், காளிதாசன், கவித்தண்டி, பரஞ்ஜோதி முனிவர், சேக்கிழார், வியாசர், சூதர் முதலிய பெரும்புலவர்கள் ஏமாந்த சோணகிரிகள் அல்ல. கதை எப்படி இருந்தாலும் அறமாதி சித்திரங்களில் சிறிதும் விட்டுக் கொடுக்கமாட்டார்கள். இந்த அறமாதிகளுக்கு வரைவிலக்கணம் வகுத்த வள்ளுவரோ சாமான்ய புலவர் அல்ல. சிருஷ்டியாரம்பத்தில்

பிரமாவுக்கும் படைக்கும் தொழில் கற்பிக்கும் ஆற்ற லுள்ள குறட்பாக்களையுடைய நூலைச் செய்திருக்கின்றார். (இது தனித்தமிழ் மந்திரத்தில் விளக்கப்பட்டிருக்கின்றது) காலத்திற் கேற்பச் சொன்னாலும் லக்ஷியம் தவறி அம்பு போடமாட்டார்கள். யாவரும் பிரதான லக்ஷியத்தை சிறிதும் மறந்துவிடமாட்டார்கள். இன்னும் பலகோடி மக்களும் மதமும் தோன்றினாலும் அத்தனைபேரும் கலவர மின்றிச் சாந்தமாய்க் கைகோர்த்துக் கொண்டு லக்ஷியம் சேரும் வரையிலும் வருதற்குத் தக்க விலாசமான பாதை வகுத்து வைத்திருக்கிறார்கள். ஆதலால் இச்சித்திரத்தின் அவசியத்தையும் அழகையும் கண்டு களிக்கும் மக்களுக்கு அச்சித்திரம் அமைந்த சுவற்றைக் கிண்டிப் பார்க்கவேண் டிய அவசியம் இல்லாதுபோய்விடுகின்றது. அதற்காகவும் அவர்கள் அதை எடுத்து நிறுத்தவும் இல்லை.

இன்னும் இந்த முறையில் சாரத்தைக் கிரகித்துக் கொண்டு தாராளமாய்ப் போகிற மக்களுக்கு எந்தக் கதை யும் புராணமும் கோயில் புராணமும் கடத்தற்கரிய மலை யாய்வந்து குறுக்கே நின்றுவிடாது. வருத்தமின்றிப் பொறுத்து வேடிக்கை பார்த்துக்கொண்டும் அதிக சித்தி ரங்களைக் கண்டும் பல நல்ல பொருட்களைக் கொண்டும் கூட்டங் கூட்டமாகச் செல்லலாம்.

இந்த நோக்கத்தோடுதான் நாம் எந்தச் சரிதங்களை யும் காண்கிறோம். இங்கு புராண இதிகாச சம்பந்தமாகச் சொல்லவேண்டிய விஷயங்கள் தற்காலத்திற்குப் பல இருக்கின்றன.

எந்தத் தலபுராணத்தை எடுத்தாலும் இந்திரன் பழி தீர்க்க முதலில் வந்துவிடுவான். சில புராணங்களில் குபேரனும் வருணனும் இந்திரனுக்கு முந்திவிடுவார்கள். இன்னும் சில தலங்களில் மும்மூர்த்திகள் அவர்கள் சக்திகள்கூட இத்தகைய காரியங்களில் உபயோகப்படுகிறார்கள்.

இதையெல்லாம் கேட்கும்போது அந்தத் தலத்தில் தான் வந்து இந்திரன் பழி தீர்த்துப் போனானே, அதற்குள் இங்கென்ன வேலே? எத்தனே இந்திரர் இருக்கின்றனர்? இவர்களுக்கெல்லாம் என்ன வேலே? இவ்வளவு பெரிய மனிதன் பழி பாவங்களில் ஏன் கையைவைத்தான்? என்று இவைபோல்வன பலவும் கேட்கத்தான் வேண்டி வரும்.

இவற்றுக்கெல்லாம் ஓரளவுக்காவது சமாதானம் சொன்னால்தான் மனச்சாந்தி ஏற்படும். ஆனல் முகவுரை பெருவயிறுரையாகி நூலமைதிக்குப் பங்கம் வருமோ என்று நினைத்து அதைப் பிறிதோரிடத்துச் சொல்லிக் கொள்ளலாம் என்று கருதுகிறோம். நமது மற்ற நூலிலும் இந்நூலிலும் கூட இதற்குச் சமாதானமான பல விஷயங்கள் வருகின்றன.

இப்பரங்கிரியானது புராணத்தில் பல படலங்களாய் தொன்றுதொட்டு பல பெரும் புலவர்களாலும் சொல்லியும் காப்பாற்றப்பட்டும் வந்திருக்கின்றது. இதில் மிக முக்யமானவற்றுள்ளும் சிலவற்றையே எடுத்துக்கொண்டு சுருக்கமாகச் சொல்லியிருக்கிறோம். பழையன கழித்தலும்

புதியன புகுத்தலும் என்ற நோக்கத்தில் இதில் சிலவற்றைக் கழிக்கவோ பிற சிலவற்றைக் கூட்டவோ விரும்பவில்லை. தர்மத்துக்கு விரோதமின்றி காலத்திற் கேற்ற சில முறைகளைச் சொல்லவே ஆசைப்பட்டோம்.

இது:—மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற முறையில் அமைந்துளது. இத்தலத்தின் மூர்த்தியமைப்பைக் கண்டும் மற்ற தலங்களில் இம்முறையில் காணுதலைக் கொண்டும் குடும்பத்திற்கு இன்றியமையாத அண்ணன் தம்பி ஒற்றுமை, மாமி மருமகள் ஒற்றுமை முதலியவை முற் பகுதியில் சமைந்துள்ளன. பிரசங்க வாயிலாகத் தராசும் வந்தன. அதில் மனத்தராசும், அதன் முள்ளும், அதில் பொருட்களைப்போட்டு நிறுக்கும் முறையும் சொல்லப் படுகின்றன. பின்பு முருகன் திருக்குறளின் சட்டத்திற்குக் கட்டுப்பட்டுத்தான் திருப்பரங்கிரி வந்தார் என்பது கார ணத்தோடும் காட்டியிருக்கின்றது. ஐந்தெழுத்தைப் பற்றியும் அதை ஜபிப்பதன் பாகுபாட்டைப்பற்றியும் கூறப்பட்டிருக்கின்றது.

பொது மக்களுக்கு நன்கு விளங்குமாறு முடிந்த வரையும் நாட்டு மக்கள் பயின்றுவரும் எளிய சொற்க ளாலேயே பெரும்பொருள்கள் என்று கருதப்படுபவை களும் சொல்லப்பட்டிருக்கின்றன.

திருத்தேவர் பழனியப்பக் கவுண்டர்.

—



பரமாத்வைத சித்தாந்த ஆசிரியர்

திருத்தேவர் பழநியப்பக் கவுண்டர்.

# திருப்பரங்குன்ற விசேட விளக்கம்.

இது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றும் சிறந்த முறையில் அமைந்த தலம். பழமையில் பழயனுன சிவபெருமானுக்கும் புதுமையில் புதியனுன முருகக் கடவுளுக்கும் சிறந்த தலமாக விளங்குகிறது.

அப்பனுக்கும் மகனுக்கும் அல்லாமல் அண்ணனுக்கும் தங்கைக்குங்கூட இது சிறந்த தலமாக விளங்குகின்றது. இங்கு அண்ணனும் தங்கையும் என்பது எம்பெருமான் நாராயண மூர்த்தியும் ஸ்ரீ துர்கையம்மனுமாவார்கள்.

## மூர்த்தி

இந்தக் கோவிலுக்குச் செல்லும் ஆண் பெண் அடங்கலுக்கும் பண்டித பாமர ரனைவருக்கும் இங்குள்ள மூர்த்திகள் வாய் பேசாமலேயே அறிவு சொல்லிக்கொடுக்கும்போலமைந்திருக்கின்றன. இத்தலத்தில் ஒரு உயர்ந்த பெரிய குடும்பம் நேரிய முறையில் அமைந்திருப்பதைக் காணலாம். எல்லாத் தலத்திலுந் தானே இப்படி இருக்கிறது என்று நினைக்கலாம். அப்படியல்ல. இந்த உண்மையை இத்தலத்திற்குச் சென்று கூர்ந்து கவனித்தவர்களுக்கே கீழ் சொல்லப்போகும் விஷயங்களொடுங்கூட நன்கு விளங்கும்.

## சம்பந்திக்குடிகள்

(சங்கர, நாராயணர்)

இங்குள்ள மூர்த்திகளில் பெரியவர்களான சம்பந்திக் குடிகளிருவரும் அகங்குளிர்ந்து முகமலர்ந்து ஒருவரை ஒருவர் எதிர்கொள்வாரென வீற்றிருக்கின்றனர். இது "உலகத்துள்ள சம்பந்திகள் இருவரும் ஒருவருக்கொருவர் தெற்கு வடக்காக மாறுகொண்டு போகாமல் வாழ்வு தாழ்வு இரண்டிலும் எதிர்கொள்ளுமாறு அமைந்திருக்க வேண்டும்" என்பதைக் காட்டுகின்றது.

ஏனென்றால் பல தலங்களில் இந்த அமைப்பை நாம் காணமுடியாது. இது திருப்பரங்குன்றத்தில் சிறந்த அமைப்பாய் விளங்குகின்றது. மேலும் உலகத்தில் கொள் வார் கொடுப்பா ரிருவரும் பகைத்துக் கொள்ளுவதனுற் றான் பெரும்பாலான குடும்பங்கள் மக்கள் மருமக்களெல் லாம் சீரும் சிறப்பு மிழந்து அல்லலுறுகின்றனர். இந்தக் கொடுமையைத் தவிர்க்கவேதான் ஒரு பரம்பெரும் பொருள் சம்பந்தமுடையதென இரண்டுரு வமைந்து பரங்கிரியதனில் சங்கரநாராயணராய்ப் பரஸ்பரம் எதிர் கொண்டு வீற்றிருக்கின்றது.

## மாமியும் மருகியும்

(துர்கை, தெய்வயானை)

மாமியும் மருமகளும் ஒருமுகமா யிருப்பதைப் பரங் கிரியில் காணலாம். ஒரு குடும்பம் செழித்தோங்கி நின்று வளரவேண்டுமானல் இந்த ஆணிவேர் பலம்பெற்று உறுதி யாய் இருக்கவேண்டும்.

"எந்தக் குடும்பத்தில் மாமியும் மருமகளும் ஓரியாடிக் கொண்டு வேறு முகமாகத் திரும்பியிருக்கிறார்களோ அந்தக் குடும்பம் தூரியாடிப் போகும்" என்பதில் சந்தேகமேயில்லை. ஆதலால் இங்கு வந்து எங்களைக் காணும் ஒவ்வொரு பெண்களும் மாமியோடு மருமகள் ஒற்றுமையாயிருங்கள்—ஒருமுகமாயிருங்கள் என்பதை இது உணர்த்துகின்றது.

## அண்ணனும் தம்பியும்

(கணபதி, கந்தன்)

விநாயகர் எங்கும் அரச மரத்தடியிலானாலும் சரி வேப்பமரத்தடியிலானாலும் சரி தனித்துப் பெரிய கோயில் கட்டிவைத்தாலும் சரி அவர் கிழக்கு முகமா யிருப்பது மக்களுக்கு நன்றாகத் தெரியும். இந்தத் தலத்தில் தம்பியோடு தானும் ஒருமுகமாயிருக்கிறார். ஆறுமுகத்துக்கு மாறுமுகங் கொள்ளாமல் வடக்கு முகமாய் சம்பந்திகளிருவருக்குள்ளும் அடங்கியிருப்பதும் போற்றற்குரியதேயாகும்.

வாழ்வோ தாழ்வோ லாபமோ நட்டமோ எது எப்படி இருந்தாலும் சரி ஆனாலும் சரி கிழக்கு முகமானாலும் சரி வடக்குமுகமா யிருந்தாலும் சரி, அண்ணந் தம்பி இருவரும் ஒருமுகமாயிருப்பது எதனினும் மிகச் சிறந்த பலமுடையதாகும் என்பதை இந்தத் தலம் உள்ளங்கை நெல்லிக்கனியென எடுத்துக்காட்டுகின்றது.

ஒரு குடும்பத்தில் செல்வமில்லாவிட்டாலும் மற்ற ஒற்றுமைகளில்லாவிட்டாலும் கூட அண்ணந் தம்பி

ஒற்றுமைமாத்திரம் உறுதியாய் வலுப்பெற்று ஒருமுகமாய் இருக்குமானல் உண்மையில் குனியாத உலகத்தைக் குனியவைக்கலாம், வளையாத வில்லை வளைப்பிக்கலாம், அசையாத மலையை அசைப்பது மாத்திரமல்ல ஆட்டியும் வைக்கலாம்.

இந்த ஒற்றுமையை இழந்தவன் அண்ணந் தம்பியை இழக்கவில்லை; உயிரையிழந்துவிட்டு நடை பிணமாய்த் திரிகிறான் என்று சொன்னாலும் அது மிகையாகாதெனத் தெரிகின்றது.

## மூலத்தான மூர்த்தி அமைப்பு

இன்னும் மூலத் தானத்திலேயே சங்கரநாராயண ரிருவருக்குள்ளும் அந்தக்குடும்பத்துள்ள அத்தனைபேரும் அடங்கியிருப்பதும் ஒரு முக்கிய விசேடமாகும்.

சர்வான்மகனை சிவபரம் பெரும்பொருள் கிழக்கு முகமாகவும் எம்பெருமான் நாராயணமூர்த்தி மேற்கு முக மாகவும் இவ்விருவருக்கும் இடையில் துர்காம்பிகை, தெய்வயானை, விநாயகர், சுப்பிரமணியர், நாரதர் முதலிய யாவரும் ஒருவருக்கொருவர் மாறுமுகமின்றி ஒருமுக மாகவே இருக்கிறார்கள்.

இதிலிருந்தும் பெரியோர் பார்வையில் இருப்பவர்கள் பலராயினும் ஒருமுகமாய் இருப்பார்கள் என்பதும் அவர் கள் பார்வையிருக்கும்போதாவது மாறுபாடின்றி இருக்க வேண்டும் என்பதும் தெரியவருகின்றது.

இதனால் சம்பந்தக் குடிகள் தங்களுக்குள் மாறுபாடின்றிக் குடும்பத்தைத் தங்கள் பார்வையில் வைத்திருக்க வேண்டும் என்பதும், அக்குடும்பத்துள்ள மற்றவர்களும் பெரியோர் இட்ட எல்லைக்குள் அடங்கியிருக்கவேண்டுமென்பதும், இப்படியிருந்தால்தான் சீரும் சிறப்பும் மதிப்பும் பெற்றுக் குடும்பம் நாளுக்குநாள் செழித்தோங்கிப் பரங்கிரியென வளருமென்பதும் சொல்லாமல் சொன்னது போலாயிற்று.

## முறையும் பாரமும்

தெய்வமானது அப்பன் மகன், மாமி மருமகள், அண்ணன் தம்பி, மாமன் மைத்துனன், கணவன் மனைவி முதலிய பல்வேறு முறைகளில் அமைந்திருக்கின்றது. இது மக்களும் இன்றியமையாத நிலையில் அமைந்த தகுதிக்கு ஏற்ப நடந்து முன்னேறவேண்டும் என்பதை உணர்த்துகின்றது.

இம்முறையிலுள்ள தொடர்புகளெல்லாம் மக்களை அன்போடும் ஆதரவோடும் இறுகப் பிணைக்கும் வலிய கயிறுகளாகும். குடும்பத்திலுள்ள மக்கள் இம்முறை கொண்டு சில நல்ல பாரங்களைச் சுமக்கவேண்டியிருக்கிறது. அச்சுமை, அறச்சுமை, பொருட்சுமை, இன்பச்சுமை, விடுதலைவழிச்சுமை என்பவைகளாகும்.

இச்சுமையைத் தகுதிக் கேற்பப் பலமுறையிலும் மக்கள் அமைந்தும் கலந்தும் தாங்கும்போதுதான் அது எளியதாகவும் திறம்பட்டதாகவும் சுகமாகவும் அமை

கின்றது. இச்சுமையை ஒருமுறைகொண்டு தாங்குமிரு வர், அதைச் சரிபாதியாகப் பகுத்துத் தனித்தனி தாங்குவ தென்பது முடியாது. இம்முறையில் யாதானு மொருவர் பக்கம் பாரம் அதிகமாகத்தா னிருக்கும். இருவரில் ஒருவர் பொறுத்துத்தா னாகவேண்டும். சுமை அதிகம் என்று மாறுமுகம் கொள்ளப்படாது. 'பங்கிட்டுத்தான் இச்சுமையைச் சுமப்பேன்' என்று வாதாடினுல் உண்மை யில் முறையானது வலிய கயிருயிருந்தாலும் அது வேறு வழியின்றி அறுந்துதான்போகும்.

## அரியதோர் தராசு

இந்த பாரத்தைச் சமப்படுத்திக் காட்ட வெளித் தராசால் ஆவதில்லை. ஆனுலும் உள்தராசு ஒன்று உண்டு. அது நடுநிலைமனம் என்பதாகும். வெளித்தராசு, (இரும் புத் தராசு) கூட பொருளின் உருவத்தை (வடிவத்தை)க் கண்டு பயப்படுவதில்லை (பாருங்கள்) ஒரு தட்டில் கல்லும் அடுத்த தட்டில் பருத்தி மூடையும் வைத்தால் பருத்தி மூடையின் பெரிய உருவத்தைக் கண்டு தராசு பயப்படுவ தில்லை. 'ஓ பருத்தி மூடையே நீ உருவத்தில் அடுத்தவனைக் காட்டிலும் பெரியவன்தான், ஆனல் உன்னைப் பெற்ற நானே துலாக்கோலாகும். ஆதலால் நீ வடிவத்தைக் கொண்டு என்னிடத்தில் மதிப்புப் பெறமுடியாது. அப் படியும் வேண்டுமானுல் கீழே இறங்கு, அதற்கு வேருளைப் பார்க்க வேண்டியதுதான். என்னிடத்தில் மதிப்புப் பெற வேண்டுமானுல் உன்னிடத்தில் யாதாயினும் கனமிருக் கிறதா? சொல். அப்படியிருந்தால் அதைச் சிறிதும் நான் குறைத்துக் காட்டமாட்டேன். உள்ளதையே எடுத்துச்

சொல்லுகிறேன். இது மாத்திரமல்ல நீ அடுத்தவனோடு எவ்வளவு மதிப்புடையவன் என்பதையும் உள்ளபடி எடுத்துச் சொல்லமுடியும்' என்று தராசு சொல்லும்.

இது போலவே நடுநிலைமனத் தராசு அறம் பொருளின்ப வீட்டு நெறிகளின் கனத்தை விளக்கிக் காட்டும். வெளியாடம்பரங்களின் பெருமையில் அது மயங்காது. அறமாதிகளை உள்ளவாறு நிறுத்துச் சொல்லும்.

ஒருவன் ஆயிரலக்ஷம் பொன் பெருமான உதவியை முறையுடைய (நட்பாளனை) ஒருவனுக்குச் செய்திருக்கலாம். மற்றவன் செய்தது காலத்தில் தினையளவு நன்றியாகவுமிருக்கலாம். மனத்தராசில் பொருள்களின் நேரிய மதிப்பைக் காட்டும் கூரிய முள்ளானது, உண்மை நூல் முடிபாகும். அது சொல்லும்:— கனம் (நிறை) இந்தத் தினையளவில் தானிருக்கின்றது என்று.

சாதாரண மனிதன் லக்ஷமும் கோடியும் பொன்னும் பெரிதென்று கருதுகின்றான்.

நேர்மையுற்ற மனனோ இலக்கத்தில் ஒன்றாயிருந்தாலும் வடிவத்தில் அது அணுவாயிருந்தாலும் பொருளில் அது தினையாக இருந்தாலும் கனத்தில் (பயனில், அனுபவத்தில்) இலக்கங் கோடி பொன்னிலும் இதை பெரிதாகவே மதிக்கின்றான்.

உண்மையில் தினையானது வடிவிலும் பொருளிலும் எண்ணிலும் சிறியதாக இருந்தாலும் காலதேச வர்த்த

மானங்களினுலும் அன்பு ஆதரவுகளாலும் அவ்வளவு பெரிய வலிமையையும் பெருமையையும் கனத்தையும் அடைகின்றது.

இப்படியே ஓரறத்தை ஒரு கோடி பொன்னுலும் செய்யலாம். ஒரு கோணி (சாக்கு) கம்பு சோளங்களா லும் செய்யலாம். இதன் நிறையும் மாற்றும் கனமும் எவ்வளவு என்பது சாதாரண மக்களுக்குத் தெரியாது. சொல்லச் சொல்லிக் கேட்டாற் கூடப் பருத்திப் பொதி கண்ட எருதுகள் போலவே அஞ்சுவார்கள். சில சமயம் அவைகளைப்போல மனத்தை (வயிற்றை)ப் புரட்டிக் கொண்டு கழிந்தாலும் கழிந்துவிடுவார்கள். இதைச் சரியாகச் சொல்லவேண்டுமானுல் நடுநிலைமனமென்னும் தராசில் சுருதி முடிபு என்னும் முள்நுனியை நேர்மையில் வைத்திருக்கும் மஹாபுருஷனுலேதான் சரியாகச் சொல்ல முடியும்.

## மனத் தராசும் அதன் முள்ளும்

"காலத்தி னல்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"

"பயன்தூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது"

"செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது"

இம்மூன்று பாசுர முடிபையும் சிறிது கவனிக்க. மனத்தராசின் முள்ளான சுருதி முடிபின் கூர்மை நன்கு விளங்கும்.

முதல்பாட்டில் நன்றி சிறிது என்கின்றது. ஆனாலும் அதனது நலனைத் தூக்கி ஆராயின் மண்ணுலகத்தைக் காட்டிலும் மிகப் பெரியது என்கின்றது. அந்த மண்ணுலகத்தினும் பெரிதென்பது போறாது மீண்டும் அதைக் காட்டிலும் பலமடங்கு விரிந்து பரந்த கடலைக் காட்டிலுங் கூடப் பெரிதாகும் என்கின்றது.

அப்படியானால் இந்த நீர், நிலம் இரண்டும் கூடிய முழு வுலகத்தையே அச்சிறு நன்றிக்கு ஈடு செய்தால் போதுமா என்று கேட்டால்:- சீச்சீ வானிலுள்ள எத்தனையோ அண்டகோடிகளையும் சேர்த்து இம்மண்ணுலகத்தையும் கொடுத்தாலும் ஈடுசெய்ய முடியாதிருக்கும்போது இந்த ஒரு நீர், நில வுலகத்தை அதற்கு ஈடுசெய்ய நினைப்பது எப்படி முடியும் என்கின்றது இந்த மனத்தராசு முள்.

இந்தக் குறள் மந்திரங்களில் (நயன்தூக்கின்) அதனுளதாம் நன்மையினைத் தூக்கி ஆராய்ந்த பொழுது "என்றும் (உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது) வையகம் வானகம் இரண்டும் அச்சிறு உதவிக்கு ஈடாகாது — பொறுக்காது—தாங்காது—இணையாகாது" என்றும் இருப்பதால் உண்மையில் இம்முடிபு உள்ளத் துலாக்கோலின் நல்லமுள் என்பது நன்றாய் விளங்கும். இதனால் பொருள்களின் தாரதம்மியங்களை சிறிதும் ஐயமயக்கங்களுக்கிடமின்றி விளங்கிக் கொள்ளலாம்.

அறமாதி பொருள்களை உள்ளபடி விளக்கும் நேரிய கூரிய நூன்முனை எதுவெதுவென்றால்:— உண்மையில்

தேவர் குறள் முதலாக முனிமொழியாந் திருவாய்மொழி நடுவாகத் திருமந்திரம் ஈறாக வுடைய இந்நூல்களின் ஒருமையே யாகும். இதை நேர்மையா யொத்துக்கொள் ளாதவைகளோ அல்லது இவற்றிற்குப் புறம்பானவை களோ கபடம் நிறைந்தவையும் ஏறுமாறுனவையும் தம் மையே சமநிலையில் வைத்துக் கொள்ளாதவையும் தம்மகத் தகப்பட்ட பொருளை அப்படியே விழுங்கி யேப்பம்போடக் கூடிய ஆற்றலமைந்தவையாகவும் இருக்கின்றன. இதனுற் ருன் ஔவையார் அக்காலத்தும் பல நல்ல நூல்கள் இருந் தும் ஒருபொருள் முடிபோடு முரணி 'மாறுபட்டு வாதாடும்' என விட்டொழித்தார்போலும். விட்டதற்கு இன்னும் சில காரணங்களும் தோன்றுகின்றன. அதைப் பிறிதோரிடத்துச் சொல்லுவோம்.

உதவி சிறிதாயினும் அது பெரிதாவதற்குத் தகுந்த காரணத்தையும் அந்த நன்னூல் முனே காட்டுகின்றது. அது:—காலத்தால் செய்த நன்றி என்றும், பயன்தூக்கார் செய்த நன்றி என்றும், செய்யாமற் செய்த வுதவியென் றும் அதனது சிறுமையை நீக்கும் பெருமையை அதற்கு அடைமொழியாகக் கொடுத்துக் கூறுகின்றது. இதனுற் ருன் இதையெல்லாம் நிறுக்க வெளித் துலாக்கோலுக் காவதில்லை என்று கூறப்பட்டது.

தராசிலும் எதற்கெது தகுதியோ அதிலதை நிறுக்க வேண்டும். தராசுதானே யென்று பொற்காதணியையும் மோதிரத்தையும் பருத்தி மலகு நிறுக்கும் முக்கோணத் தில் வைத்துப் பார்ப்பதும் அதனுல் அது சில குண்டுமணி

எடைகளை விபரமாய் எடுத்துக்காட்டவில்லையென அதன் மேற் குற்றம் காட்டுவதும் தகுதியன்று. அதுமட்டும் அல்ல. அது குற்றமுடையதுமாகும்.

இப்படியே கலப்பைக் கொழுவையும் மண் வெட்டித் தகட்டையும் பொன் தராசில் போட்டு நிறுப்பதும் மடமையேயாகும். இதுபோலவேதான் உள்ளத் தராசிலும் எதில் எதைப்போட்டு நிறுக்கவேண்டும் என்பது உண்டு. இதை விட்டுவிட்டு எதிலும் எதையும்போட்டு நிறுத்துக் கொண்டு பொறுத்தமில்லையே என்று ஒருவன் கதறுவானுனல் பெரியோர்கள் அவன் செயலைப் பார்த்து, 'ஐயோ பாவம், அறியாவிட்டாலும் அயலைப்பார், தெரியாவிட்டாலும் தெருவைப்பார் என்பார்களே பாவம், அந்த வாய்ப்பும் வழியும் இவனுக்கு இல்லைபோலும் என்று வருந்துவார்கள்.

ஆதலால் வெளிப்படை யுருவத்தையும் உபசாரத்தையும் கொண்டு தொடர்புடையாரிருவர் சமமாகப் பகுந்து அறம் பொருள்களைச் சுமந்துகொள்ளுவதென்பது முடியாததாகும். இதனுல்தான் "ஒருவர் பொறை இருவர் நட்பு" என்று பெரியோர்களும் சொல்லியிருக்கின்றனர்.

ஆகவே தொடர்புடையாரில் யாராயினும் ஒருவர் இயல்பாகவரும் வாழ்வு தாழ்வுகளில் உண்டாகும் சங்கடங்களையும் மனத்தாபங்களையும் கடுஞ்சொற்களையும் பொறுத்துத்தான் ஆகவேண்டும். நேற்றுனக்கு நான் செய்தேன், இன்றெனக்கு நீ செய்துதான் ஆகவேண்டும். நேற்று நான் பொறுத்தேன், இன்று நீ பொறுத்துத்தான்

ஆகவேண்டும் என்று கண்ணை மூடிக்கொண்டு நட்டார் சுற்றத்தார்மேல் எறுவதும் தகாது? இரண்டுபேரும் ஓரே பிடிவாதமாயிருந்தால் உண்மையில் தொடர்பு அறுந்து விடும். பின் அந்தப் பிறவியில் அவ்வளவுதான். அறுந் ததை ஓட்டவைக்கவோ முடிபோடவோ இந்த விஷயத் தில் மீண்டு கஷ்டமாகப் போய்விடுகிறது.

"செல்வார் அல்லர் என்று யானிருந்தனே, வீவாள் அல்லள் என்று அவரிருந்தனரே, ஆயிடை இருபேர் ஆண்மை செய்தது" (வேரொடும் பிரியக் காரணம் பார்த் தது) என்று குறுந்தொகையில் தலைவி தோழிக்குச் சொல்லி வருந்துவதும் இவ்விஷயத்தில் சாக்ஷியாகக் கொள்ளத்தக்கது.

ஆதலால் சுற்றம் என்னும் முறைகருதி எத்தகைய பெரிய குற்றத்தையும் வழிகண்டு பொறுத்து அன்போ டணைத்துக் கொண்டு மேலே முன்னேறிச் செல்லக் குடும் பத்தில் வழியிருக்கின்றது.

மக்களை ஆரம்பித்த கடவுளிடத்திலேயே இதைக் கண்டு வழிபட்டு அதுகாட்டும் வழியில் நடந்து கொள்ளு வது இன்னும் சிறந்ததே யாகும்.

அதிகம் சொல்லி என்ன? இவைபோன்ற பலநீதிகள், இவற்றைக் காணும் மக்களது உள்ளக் கண்ணுக்கு விளங்கு முறையில் இந்த மூர்த்திகள் அமைந்திருக்கின்றன.

---

## மூர்த்தி வழிபாடு

அபிஷேக அலங்கார ஆராதனைகளைச் செய்து பல முனிவர்களும் அரசர்களும் புலவர்களும் சாதாரண மக்களும் பெரிய பெரிய ஆபத்துக்களினின்றும் நீங்கினார்கள். விரும்பிய பெரிய நன்மைகளையும் அடைந்தார்கள்.

## படம் பிடிக்கும் விதம்

மனம் (உள்ளம்) என்னும் காகிதத்தில் அன்பு என்னும் மை தடவி தகுந்த (விசேஷ புண்ணிய) காலத்தில் இம்மூர்த்திகளை ஒருமுகமாயிருந்து சலிக்காத மனதில் (போட்டோ) படம் பிடித்துக்கொள்ளவேண்டும். எந்த ஆபத்துவேளையிலும், வனத்திலும், ரணகளத்திலும், அந்தியிலும், சந்தியிலும் பெருக்கெடுத்த ஆற்றின் பிரவாகச் சுழலிலும் எங்கே நினைத்தாலும் இந்தப் படம் அதன் சிறப்புக்களோடு மனக்கண் முன் வந்து நிற்குமாறு அழுத்தமாக தியானம் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். அன்பு-மை போய்விடுமானால் வெறும் காகிதம்தான் மிஞ்சி இருக்கும். மூர்த்திகளின் உருவம் காணாது பறந்து போய்விடும். நாலாயிரங்கண் போறாது இது விஷயமாக இக்காலத்து மக்கள் மிக்கதோர் புண்ணியமும் செய்திருக்கிறார்கள். கண்ணுங் கருத்தும் குளிரக் காணும் பெருமையைப்பெற்றார்கள். எக்காரணத்தால் என்றால்:- இவ்வருஷம் அறிவுடைப் பெருமக்கள் மிக மகிழ்ச்சியோடும் பெருமுயற்சியோடும் கும்பாபிஷேகம் செய்து வைத்தபின் மூர்த்திகள் மிக ஜாஜ்வல்யமாய் தகதகாயமானமாய் விளங்குகின்றன. தங்கக் கவசமிட்ட காலத்தில்

இங்குள்ள சுப்பிரமணியமூர்த்தி பூர்ண சந்திர பிம்பத்தை உருக்கி வார்த்ததுபோல அவ்வளவு சீதளமாயும் மனோகர மாயும் இன்பகரமாயும் இருக்கின்றது.

இப்போது பரங்குன்றத்தில் முருகனைத் தரிசிப் போர்க்கு அருணகிரியார் முருகனைப் பார்க்க "நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகனே" என்று சொன் னது சரியாகத்தான் இருக்கின்றது என்று தோன்றும். இன்னும் அடுக்கு தீபம் கொண்டு சிவாச்சார்ய சுவாமிகள் அவன் திருமேனியைக் காட்ட ஆரம்பித்து விடுவார்களா னல் அப்போது உண்மையாக அருணகிரியார் சொன்ன தும் போருது. நாலாயிரம் அல்ல நானூறுகோடி அல்ல "பலகோடி கண்கள் படைத்திலனே அந்த பங்கயத் தோன்" என்று சொல்லலாமென்றும் தோன்றும்.

குதர்க்க மதிவாய்ந்த கெட்ட மக்கள் பேச்சைக் கேட்கப்படாது. அது பூச்சி (புழு) படத்தை அரிப்பது போல அன்பைக்கெடுத்து மூர்த்தி தியானத்தையும் அழித்துவிடும். மேலும் கரும்பு தின்றதற்குக் கரும்பும் வேம்பு தின்பதற்கு வேம்பும் ருசி என்பார்கள். இது புழுக்களுள் இருப்பதை இன்றும் காணலாம். இவற்றை மாற்றிக்கொண்டுபோய் துவாரம் பார்த்துவிட்டாலும் கரும்பிலிருந்து வேம்புப்புழு வெளியேறிவிடுகிறது.

கரும்புப் புழுவும் இப்படியேதான். புழுவில் மாத்திர மல்ல, மக்களிலும் இப்படியுண்டு, இந்தப் பகுப்பு இல்லா விட்டால் "தீயாரைக் காண்பதுவும் தீது, அவர்சொற் கேட் பதுவும் தீது" என்று ஔவையாரும் சொல்லுவார்களா?

இத்தலத்தில் அரிச்சந்திரன், சிபி, நக்கீரர் முதலிய பலர் தம் உள்ளக் கடிதத்தில் மூர்த்திகள் உருவெழுதி அழியாது வழிபட்டு விரும்பிய நற்பயனை அடைந்து இன்னும் அமரராய்ப் புகழப் படுகின்றார்கள்.

இத்தலத்திற்கு சமீபத்துள்ளவர்கள் நாள், வாரம், வருஷம் ஒருமுறையாவது சென்று ஏகாந்த மனதோடு நின்று கண்வாயிலாக இம்மூர்த்தியைக் கருத்தில் எழுதிப் பழகிக்கொள்ளவேண்டும். அப்போது காகிதம் கிழிந்தாலும் படம் போகாது என்ற நிலையில் மூர்த்தி உருவம் உள்ளத்தில் அமைந்துவிடும். இந்த தைரியத்தினால்தான் அருணகிரிநாதர் "முருகன் என்னுள்ளத்தில் குடிகொண்டு விட்டான் எமனே! என் கைக்கு எட்டும்படி வந்துபார்" என்று கட்டுரை கூறுகின்றார். தூரத்துள்ளாரும் ஒரு தடவை கண்டு தனியிடத்திருந்து தியானித்து உறுதி செய்துகொள்ளலாம்.

" ஒருநாள் பழகினும் உத்தமன் நட்பு
இருநிலம் பிழக்க வேரூன்றியது போல"

பிறவியில் ஒரு நாள் கண்டவருக்கும் இது உறுதிபெற்றிருக்கும். அன்பிலாருள்ளத்துப் பலநாள் பழகினும் நீர் மேல் பாசி (பாசம்) போல வேரூன்றாது போயினும் போகும். சிலநாட் பழகினாலும் மரணம் வரையும் உத்தமர்கள் மனக் கண்ணால் பகலும் இரவும் கண்டுகொண்டிருப்பார்கள். நனவில் மாத்திரமல்ல கனவிலும் அவனைக் காண்பார்கள்.

---

## தலப் பெருமை

பரமனே குன்றமாயமைந்திருக்கின்ருன் என்ற பொருளில் இது பரங்குன்றம் என்று சொல்லப்படுகின்றது. மேலான குன்றம் என்ற பொருளும் இதற்கு உண்டு. மேல் மேல் என்று தேடிப் போனவிடத்தும் முடிவில் யாவரும் மேலாகக் கண்டது கடவுளேயாதலின்-மேலான குன்றம் - கடவுள் குன்றம் - பரங்குன்றம் என்பன ஒரு பொருள் சொற்களேயாகும்.

இக்குன்றம் வாயு பகவானுலே தமிழ்நாடு செய்த தவப்பயனுய் இங்கு நிருவப்பட்டது.

இது, முருகனுலே முதலில் வழிபடப்பட்டு, பின் முருகனுக்கு சொந்தத் தலமாகவும் அமைந்திருக்கின்றது.

## முருகன் இதை வழிபடக் காரணம் என்ன ?

உலக மக்களனைவரும் ஓதியுணர்ந்து ஜெபித்து உய்ய வேண்டி உமையம்மையாருக்கு கயிலையின் கண்ணே தன் திருநாமமும் முதல்நாமமும் மூலமந்திரமும் பீஜமந்திரமுமான பஞ்சாக்கரத்தை விளக்கமாய் உபதேசித்துக்கொண்டிருந்தார். அப்போது முருகக்கடவுள் இளம்பிள்ளையாய் அம்மையின் மடியில் அமர்ந்து இருந்தனர்.

சொல்லுவதும் ஒருவர், கேட்பதும் அப்படியே என்றுதான் பெரியவரிருவரும் இருந்தனர். ஆனல் சொன்னது ஒருவர் கேட்டது இருவர் என்பது சில காலத்திற்குப் பின்னுற்ருன் தெரியவந்தது.

பொன்னுக்குப்பணி (மோதிரம்) காரியம் என்பதைத் தவிர எல்லாவிதத்திலும் ஒன்ருகவே இருக்கும். சிறிதும் வேற்றுமைப்படாது. நிறம்,உறை,கனம்,மாற்று,பிரகாசம் முதலிய எல்லாமும் ஒன்ருகவே இருக்கும். ஏனென்ருல் காரியம் காரணத்தைத் தவிர அணுமாத்திரமும் வேறு பட்டிருக்காது.

முருகன் இளம்பிள்ளையாயிருந்தாலும் சச்சிதானந்த மான காரண சொரூபத்திற்குச் சிறிதும் வேறுபட்டில்லை. ஞானகன மேனியனுகிய அவனுக்கு எவ்வளவு சிறிய குழந்தையா யிருந்தால்தானென்ன? தாய் மடியிலிருக்கும் போதே தந்தை சொன்னதும் சொல்லாததுமாய் இசை எச்சம் சொல்லெச்சம் முதலாகக் குறிப்பாலுணரத் தகுந் ததுமான பலவும் முருகனுக்கு விளங்கிவிட்டன.

பின்னெரு நாளில் பிரமாவிடம் குழந்தையை வேதவேதாங்கம் கேட்கவிட்ட சமயத்தில் சிவாக்கினியின் கொழுந்தான முருகனிடத்தில் பிரமாவின் கல்வி பலிக்க வில்லை. "கிளி—பேச்சு பேச்சு என்னும் பெரும்பூனை வந்தாக்கால் கீச்சுக் கீச்சென்னும்" என்ற முறையில் தேவ ரிடத்தும் மனிதரிடத்தும் செல்லுபடியாகும் அவரது வேதப் பொருள்களெல்லாம் முருகனிடத்துச் செல்லாது போயின.

செல்லாவிட்டாலும் போகட்டும், முருகன் ஆளை விட்டாரா? என்ருல் அதுவுமில்லை. 'நிரம்பிய நூலின் றிக் கோஷ்டிபுகும்' புலவர்களுக்கு புத்தி கற்பிக்கவேண்டும் என்று 'தெளிவில்லாத இந்த வேலை உமக்கு எதற்காக

வேண்டும்' என்று ஆளைப் பிடித்துச் சிறையிலும் போட்டு விட்டார். ஐயோ! பாவம் பெரியவரே பிதாமகரே என்று யாவரும் அஞ்சினர். முருகனும் உருவத்திலும் வயதிலும் தவிர பெருமையில் எதிலும் குறைந்துவிடவில்லை என ஞானப் புன்முருவல் பூத்த முகத்தோடு விளங்கினர்.

இதுவன்றியும் உபாத்தியாயர் சிறையிலிருப்பதைக் கேட்கவந்த தந்தையாரையும் முறைப்படி உட்காரவைத்து தானே உபாத்தியாயராயிருக்கவும் தொடங்கிவிட்டார்.

கடவுள்—முருகனே நான்கு நாளைக்காவது அடங்கி யிருந்து கேளாமல் முதல் நாளில் அதுவும் வித்தியாரம்ப முகூர்த்தத்திலே உபாத்தியாயருக்கு இந்தப் பழி செய்து விட்டாயே என்ருர். முருகன்-பொருள் விளக்கமில்லாமல் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண் டிருப்பதில் என்ன பெரும்பயன் உண்டாகப் போகின்றது. வேதத்தில் ஆதியும் இருதயமுமாயுள்ள ஓங்காரத்திற்கும், பஞ்சாக்கரத்திற்கும் நேரிய பொருள் தெரியாத ஒருவரை குருவெனக் கட்டிக்கொண்டு அல்லலுற வேண்டாமென்று தான். மேலும் வீண் அபிமானம் அவர் கண்ணை மறைத் திருக்கவும் கண்டேன். சிலருக்கு செல்வம் வந்தால் கண் தெரியாமல் போகின்றது. கண்ணை மூடிக்கொண்டு தெரிய வில்லை என்ருலும் குற்றமில்லை. கண்ணை விளித்துக் கொண்டே தெரியவில்லை என்கிருர்கள். ஆதலால்தான் கொட்டிச் சிறையிலிட்டேன் என்ருர்.

கடவுள்—ஆனல் முருகா உனக்குப் பஞ்சாக்கரப் பொருள் தெரியுமா? என்ருர். முருகன்-தெரியும் என்ருர்.

நல்லது. ஆனல் சொல்லு கேட்போம் என்ருர். முருகன்-கேட்கும் முறைப்படி மாணவ முறையிலிருந்து கேட்டால் யானதைச் சொல்லுவேன் என்ருர்.

அப்படியே ஆகட்டும் என்று இறைவனும் முருக னுக்கு மேலிடங் கொடுத்துத் தான் கீழிடத்திருந்து கை கட்டி வாய் பொத்திக் கேட்கத் தொடங்கினர்.

முருகன்—அகர உகர மகர விந்து நாதங்கள் ஐந்தும் ஓங்காரத்தி லமைந்திருப்பதை நன்கு விளக்கிக் கூறினர். மீண்டும் அது நன்கு விளங்கு முறையில் நகர முதலான பஞ்சாக்கரத்தையும் விளக்கினர்.

ஆலம் விதையில் பிரமாண்டமான ஆல மரத்தின் வேர், பட்டை, கிளை, தழை முதலிய அனைத்தும் சூக்கும மாய் அடங்கியிருத்தல் போலவும், ஒரு சிறு புல் நுனி யளவு சுக்கிலத்தில் கையும் காலும் அதில் விரலும் அதில் நகமும், அப்படியே கண்ணும் அதில் வெள்ளை விழியும் அதன் மத்தியில் கருவிழியும் அதன் நடுவில் கடுகு அள வுள்ள சிறு பாவையும் அதனுள்ளும் புலனுகாத சூக்குமக் கண்ணிந்திரியமும், அவ்வாறே மற்ற நாடி, நரம்பு, ஆரு தாரம், மும்மண்டலம், இருதயம் அதன் துடிப்பு முதலிய பல்வேறு பொருள்களும் அவற்றின் அமைப்புக்கும் விஸ்தரிப்புக்கும் வேண்டிய சக்திகளனைத்தும் அந்தச் சிறு விந்துவினிடத் தமைந்து வெளிப்படையா யில்லாது குறிப்பாலுணரக் கிடக்கின்றன. இவைபோல ஐந்தெழுத் தில் நான்கு வேதம், ஆறு சாஸ்திரம், பதினெண் புராணம், அறுபத்திநான்கு கலைஞானம், தொன்னூற்ருறு தத்துவம்

இன்னும் இவற்றின் கிளைகள் முதலிய அனைத்தும் அடங்கி யிருக்கின்றன. அதனால் இது பீஜ மந்திரம் என்றும் மூல மந்திரம் என்றும் சொல்லப்படும்.

அறம் பொரு ளின்பத்திற்காவன சொல்வதன்றியும் வீட்டுப் பகுதிக்கான சிவோகம்பாவனையும் மிகத் தெளிந்த முறையில் இம்மந்திரத்தில் காணப்படுகின்றது.

இதில் சிவத்தை முன்வைத்து நம: என்பதைப் பின் வைத்து சிவாயநம என்று அருச்சனை செய்யவேண்டும். இவ்வொன்றையே சொல்லி 108 தடவை பூவோ தழையோ போட்டால் அஷ்டோத்திர அருச்சனையாகும். 1000ஞ் சொல்லியும் இவ்வொன்றையே செய்யலாம். இது சிறந்த முறையான ஸஹஸ்ரநாம சிவார்ச்சனை யாகும்.

ஜெபம் செய்வது ஐந்தெழுத் தமைந்த முறையில் நகரம் முதலாகச் செபிக்கவேண்டும். வாக்குச் செபம் செய்யும்போதும் நமச்சிவாயவெனும் சந்தையாகவே செய்வது நலம்.

சிவோகம்பாவனையிலும் இது இம்முறையிலேதான் அமைந்திருக்கிறது. எனக்கு என்று ஒன்றையும் காணேம். எல்லாம் சிவனுக்கென்றே அமைந்திருக்கின்றன. ஆதலின் எல்லாம் சிவமாகும் என்ற முறையில் நானும் அவனுவன் என்பது இதன் சுருங்கிய பொருளாகும். (நம:—எனக் கென்று ஒன்றுமில்லை. சிவாய—எல்லாம் சிவனுக்கென்றே யிருக்கின்றன.)

இது ராஜ மந்திரம், அர்த்த மந்திரம், புருடார்த்தம் நான்கையும் கொடுக்கும் மந்திரம், மஹா மந்திரம், ஆதி மந்திரம், அனுதி மந்திரம், பீஜ மந்திரம், மூல மந்திரம், யாவர்க்குமாம் மந்திரம் என்னும் பல மஹாத்மியங்களை உடையதாகும்.

இதைப் பலவாருக இகழ்ந்த மக்கள் கீழும், புகழ்ந்த மக்கள் மேலும் போகிருர்கள்.

## ஜபம்

108 நாள் ஒரு மனிதன் இதை தொடர்ச்சியாகச் செபம் செய்யவேண்டும். நாள் ஒன்றுக்கு இரண்டு அல்லது மூன்று முறை செய்யவும். முறை ஒன்றுக்கு 108க்குக் குறையாமல் செய்யவும். 108லேயும் இடையில் ஆடு, மாடு, பெண்டு, பிள்ளை, பணம், காசு முதலிய யாதொன்றும் நடுவேவந்து விழப்படாது. அப்படி இடையில் வேறு எண்ணம் விழுந்துவிடுமானுல் மறுபடியும் முதலிலிருந்து ஒன்று இரண்டு என்ற எண்ணிக்கையில் 108 ஜெபிக்கவேண்டும்.

இவ்வாறு 108 நாள் நியதியாய் செய்து வந்தால் விரும்பிய பயனுக்கும் தனக்குமுள்ள தகுதியும் தொடர்பும் தனக்கே நன்கு விளங்கும். இதுவெல்லாம் நாடு மெச்சக் குடிக்கும் பாலல்ல, நாவு மெச்சக் குடிக்கும் பாலாகும். ஒரு நாள் நாடு மெச்சப் பால் குடித்தாலும் மறுநாள் அவன் வயறு எடுத்து மல்லாந்து போகவேண்டியதுதான்.

நூற்றெட்டு நாளல்ல ஆயிரத்தெட்டு நாள் வேண்டு மானுலும் ஜபிக்கிறேன். ஆனுல் பயனை முன்னே கொடுக்கச் சொல்லவேண்டும் என்று கேட்பவருக்கும் இதற்கும் வெகுதூரம். தூரம் என்றது இந்தப் பிறவிக்கு மாத்திரம் அல்ல, பல பிறவிகளுக்கும் கூட இந்தத் தூரம் வந்து விடும்.

சில காலம் இவ்வாறு குறித்த வரம்பில் நின்று ஜபித்துப் பழகிய பின்னர்—சதா காலமும்—நடக்கும் போதும் நிற்கும்போதும் உழவு ஓட்டும்போதும் தொழிலுக்குப் போகும்போதும் தெருவில் குப்பை கூட்டும்போதும் கக்கூஸ் அள்ளும்போதும் அவ்வத் தொழிலாளர் இதைச் சிந்தித்தல் வேண்டும். அப்படிச் சிந்திப்பதற்கும் மீண்டு இது மிக எளிதாகியும்விடும்.

## மூன்றுவித ஜபமும், இடமும், பகைவரும்

வாசிகம், உபாம்சு, மானதம் என்று ஜபம் மூன்று விதமாகும். பொதுவாக ஜபத்திற்குப் பொறி புலன் அடக்கி உட்காரவேண்டியது அவசியம். உட்காருமிடம் சந்தடியும் கலவரமும் துர்நாற்றமும் சருகு புற்று குப்பை கூழங்களும் இல்லாத இடமாயும், இடிந்த சுவர் ஓரம் நாற்சந்தி துர்ஜனர் வாயாடி வம்பர் பாம்பு பூரான் சூழாத இடமாகவும் இருத்தல் நலம். இவைகள் மன அமைதியைக் கெடுத்துவிடும். இவைகளெல்லாம் ஜெபிப்பவனுக்கு வெளியே இருந்து பொந்தில் ஐந்துமடங்கிய ஆமையைத் தூண்டிபோட் டிழுப்பதுபோன்று வெளியே இழுப்பன வாகும்.

இதுவன்றி ஜெபிப்பவனுக்கு உள்ளேயே இருந்து அங்கடங்கிய மனதை வெளியே உந்தித் தள்ளுபவைகளும் உண்டு. வெளியே இருக்கும் கெட்டவைகளைவிட உள்ளே உள்ள இவைகள் மிகக் கொடியவைகளாகும். அவைகள் காமக் குரோத மோக லோப மத மாச்சரியமாகும். "கடவுளைக் கருதலாம், சிறிது ராஜ மந்திரமான ஐந் தெழுத்தைச் செபிக்கலாம்" என்று ஒய்ந்து உட்காரும் போழ்துதான் ஆசை கோப மோகங்களெல்லாம் அங்குள்ள மனதைப் பிடர்பிடித்து வெளியே தள்ளும். ஜெபிக்க ஆரம்பிக்கும் போதுதான் 'குதித்துக் குதித்துப் பார்த்து எட்டவில்லை என்று விட்டுத் தொலைத்த பாழும் எண் ணங்க'ளை யெல்லாம் அவன் மனக்கண்ணுக்கு முன்னே ஆசைப்பேய் கொண்டுவந்து வரிசையாக நிறுத்தும். இது ஒன்று? கோபக்கொடியனோ உண்மையில் தன்னைப் பகையாதவனை யெல்லாம் நண்பனைக்கூடப் பகையாளி யாக்கித் தன் மனக்கண் முன் மீசையை முறுக்கிவிட்டு நிறுத்தி அவர்கள்மேல் படையெடுக்கத் தூண்டுவான். இப்படியே இன்னும் பலரும் உட்பகைவராய் இருந்து கொண்டு தொந்தரவு கொடுப்பார்கள்.

வெளிப்பகைகளுக்கு ஒரு மனிதன் தள்ளிப்போய் உட்காரலாம் ஒளிந்தும் இருக்கலாம். ஆனால் இந்த உட் பகைகளுக்கு எங்குபோயொளிப்பது அல்லது தப்புவது. "நீரிற் குளிப்பினும் காமஞ் சுடும், குன்றேறி ஒளிப்பினும் காமம் சுடும்" என்றதுபோல இவைகளைத் தப்பமுடியாது. ஆதலால் முடிந்தவரையும் இவ்விரு பகையையும் விலக்கி

ஜபிப்பது நல்லது. சிலருக்கு இன்றியமையாத நிலையில் அப்படிப்பட்ட இடங்களிலும் மனோ நிம்மதி ஏற்படு மானால் நல்லதே யாகும். இதற்காக வேறிடம்போ யலைய வேண்டாம். ஆனால் ஜெபிக்கும்போதாவது உட்பகை யில்லாதிருப்பதே நல்லதாகும்.

**வாசிகம்:**—மனமொருமித்து வாயினாலே தாராள மாய் மந்திரத்தை இடைவிடாது சொல்லுவது வாக்கு ஜபமாகும். பலரும் கூடித் திருவீதி வலம் வரும்போதும் ஆலயம் சுற்றும்போதும் இதைச் சொல்லிவரலாம். வட நாட்டிலுள்ளவர்கள் இதை மிகுதியும் கையாளுகிறார்கள். இது ஜெபித்தவனுக்கே யன்றி மற்ற கேட்போருக்கும் புண்ணியத்தை உண்டாக்குவதாகும்.

**உபாம்சு:**—இது கடவுண் மந்திரத்தை மனத்தோடு உதடு மாத்திரம் அசையச் சப்தமின்றி முணுமுணுப்ப தாகும். இது தனக்கு நன்மை தருவதோடு பிறருக்கும் பக்தி சிரத்தையை உண்டுபண்ணும்.

**மானதம்:**—இது உதடு முதலியன சிறிதும் அசை யாது அகத்துக்குள்ளேயே களங்கமின்றிய மனங்கொண்டு ஜெபிப்பதாகும். பிறருக்கு இவன் ஜெபிக்கிறானா அல்லது ஊர்மேயப் போயிருக்கிறானா என்பது தெரியாது. இவன் மனம் உண்மையாகச் செபிக்கலாம், கண்டா ரிவனைக் கண்டபடியாகவும் சொல்லலாம்.

இந்த மூன்றுவிதமான ஜபத்திலும் ஒன்றுக்கொன்று முறையே ஆயிர மடங்கு நன்மை உண்டு.

வாசிகம் உபாம்சு மானதம் என்றும்
அதிலோ ரொன்றினுக் கொன்று
தேசுடைத் தென்று செப்பினர் பிறர்க்குத்
தெரியவே ஜெபித்திடு ஜபந்தான்
வாசிகம் உபாம்சு வாயித முடித்தல்
மாத்திரம் மானசம் அடங்கி
ஆசரச் சிந்தை செய்தலொன் றுக்கொன்
றுயிர மடங்குநல் லனவாம்

என்பது ஈசுர கீதையாகும்.

இவ்வாறு சுருங்கச் சொல்லி இதிலுள்ள ஒவ்வொரு பகுதியையும் விரித்துச் சொல்லத் தொடங்கும்போது தேவ வருடத்தில் ஒரு வருடம் ஆகிவிட்டது.

கடவுளுக்கும் கேட்பதில் ஒருமுகப் பட்டிருந்த கருத்து திடீரென்றுமாறி "இவன் எங்கிருந்து இவ்வளவை யும் கற்றுக்கொண்டான் என்னும் எண்ணம் உண்டாயிற்று. ஏனென்றால் ஓங்காரத்தோடு கூடிய நகாரம் முதலாகிய ஷடாக்கரத்திற்கு தெய்வமும் ரிஷியும் முதற்குரவனும் தானே யாதலின் தன்னிடத்தோ தாயிடத்தோ கேட்காமல் எப்படி இவனுக்கு இந்தப் பரிபூரண கலாஞானம் வந்தது என்ற ஐயம் உண்டாயிற்று.

உடனே மந்திரப் பொருள் கேட்பதை நிறுத்திவிட்டு முருகா! யாரிடம் கேட்டு இந்தப் பூரண ஞானம்பெற்றாய் உண்மையைச் சொல் என்றார்.

முருகன்—தாங்கள் என் அம்மாவுக்குச் சொன்ன போது நான் இன்னும் சிறு குழந்தை வடிவத்தில் மறைந் திருந்து கேட்டேன் என்ருர்.

கடவுள்—மகனே! என்னை மாத்திரம் கேட்கும் முறையிலிருந்து கைகட்டி வாய்பொத்திக் கேட்கச் சொன்னுயே. அப்படியானுல் அது உனக்கெங்கே போயிற்று. வேதப் பொருளைக் கேட்கும் திறமை உனக் கிருக்கும்போது வந்தனை வழிபாடு செய்து குருவென மதித்து என் கேட்டுக்கொள்ளவில்லை. நீதி அல்லது விதி என்பது தனக்கொன்றும் பிறர்க்கொன்றுமாக ஒரே விஷயத்தில் வைத்துக்கொள்ளலாமா? இது சரிதானு? என்று கேட்டார்.

முருகனுக்கு திடீர் என்று திருவருளின் குறிப்பு விளங்கிவிட்டது. உடனே உபதேசத்தை நிறுத்திவிட்டு திடுக்கென வெழுந்திருந்து திருவருளையும் தந்தை திரு வடியையும் நோக்கி நின்ருர்.

கடவுள்—முருகா! நாமே நம் தவறுதலை உணர்ந்து பரிகாரம் செய்யவேண்டும். அப்போதுதான் அது உலகத் திற்கு வழிகாட்டியா யமையும்.

அனுதியாகவே வந்த தமிழ் வேதத்தை ஸிருஷ்டி தோறும் வந்து வியாசரைப்போல இலக்கண வரம்பமைக் கும் வள்ளுவர் வாயிலாக நாமே வெளியிட்டிருக்கிறே மல்லவா?

அதில் திருட்டு என்பது செல்வப் பொருளுக்கு மாத்திரம் அல்ல, கல்விப் பொருளுக்கும் உண்டு. அதுவும் ஞானநூற் பொருளானல் அது இதையெல்லாம் விடப் பெரிய திருட்டாகும். ஆசிரியனுக்கு இயன்றது கொடுக்காமலும், வந்தனை வழிபாடுகள் செய்யாமலும் ஞானநூற் பொருளையும் கேட்டுணர்ந்து கொள்வானுயின் அதுவும் பெரிய கள்ளமாகும் என்னும் கருத்தை,

"எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு" — என்னும் குறள்

மந்திரத்தில் பொய்யாமொழியான் செய்ய திருவாக்கால் வெளியிட்டிருக்கிறோம். இந்தத் தமிழ் வேத சட்டப் பிரகாரம் எங்களை அறியாமல் அல்லது எங்களுக்கு அறிவிக்காமல் ஓங்கார—பஞ்சாக்கரப் பொருளைத் தெரிந்து கொண்டது கள்ளத்தின்பாற்படும்.

இதற்குப் பரிகாரமாகத் திருப்பரங்குன்றம்போய் வேல்கொண்டு கீறி சரவணப்பொய்கை உண்டாக்கி தவஞ் செய்து தங்கருமஞ்செய்து முடிப்பாயாக. யாமும் அங்கு வருகின்றோம் என்று திருவருட் சம்மதமுண்டாயிற்று.

அவ்வாறே முருகன் வந்து பரங்குன்றத்தையே சிவலிங்கமாக வழிபட்டு சரவணத் தீர்த்தம் முதல் எல்லா நலங்களையும் உண்டாக்கினர். அங்கேயே சிவலிங்கப் பிரதிட்டை செய்து நேர்மையில் மூன்று வருடம் பஞ்சாக்கரத் தபசு செய்தார். முடிவில் தைப் பூசத்தன்று இறைவன் சுடலைப்பொடி பூசி விடையேறித் தூவெண் மதிசூடி அம்மாளோடுங் கூட முருகன்முன் வந்து தோன்றினர்.

அணைத்தார். மோந்தார். முத்தமிட்டார். இளங்கன்றை மோந்து நக்கிக் கொடுக்கும் கறவையுடன் வந்த காளையின் காட்சி அங்கு காணப்பட்டது.

தைப் பூரணையில் இக்காட்சி நடந்ததால் தைப்பூசம் முருகனுக்கும் சிவனுக்கும் மிக விசேட நாளாயிற்று. இந்நாளில் தரிசனம் செய்யும் மக்களுக்கு எல்லா நலனும் கொடுக்கவேண்டுமென்று முருகன் வேண்டிக்கொண்டார். தைப்பூச தரிசனம் முதலியவற்றிற்கு இத்தலத்தில் அதிக பயன்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இன்னும் இத்தலத்தில் அரிச்சந்திரன், சிபி, பிரமா, கோவிதாரத்துவிசன், நற்கீரர், பராசபுத்திரர் முதலியோர் வழிபட்டுத் தாங்கள் விரும்பிய பயனை விரும்பியபடி அடைந்திருக்கிருர்கள். இந்தத் தலம் முருகனுக்கு ஆறு படைவீட்டினும் சிறந்ததாய் முதலதாய் விளங்குகிறது.

அக்கிரமக்காரர்களை (சூரரை) அழித்துத் தொலைத்த பின் வெற்றிப் பரிசாக இத்தலத்தில் தெய்வயானையம்மை யை ஏற்றுக்கொண்டார். ஆதலால் இத்தலம் எப்போதும் மங்கள கோஷங்களோடு மங்களங்கள் (கல்யாணம்-மணம்) நடந்துகொண்டிருக்க இன்றும் காணப்படுகின்றது.

இன்னும் இத்தலத்தில் தபசுக்குத் தகுதியான குகைகள் நல்ல முறையில் பல இருக்கின்றன. மலையின் உச்சியில் நற்கீரருக்கென உண்டான காசி கங்கையும் விச்வேச்வரனும் விசாலாக்ஷியும் இன்றும் கோவில்கொண் டெழுந்தருளியிருக்கின்றனர்.

மருதஞ் சூழ்ந்த குறிஞ்சியின் தோற்றம் (வயல் சூழ்ந்த மலையின் தோற்றம்) மயில்மீதமர்ந்த முருகனைப் போன்றும், உத்தம சதிபதிகளின் குடிசை போன்றும், நல்லாற்றால் நாடிய அருள் நடுவில் நீண்ட வீரம் போன்றும், நிரம்பிய நூலோர் மத்தியில் வளர்ந்த நேரிய வாக்குவாதம்போலும், விவசாயிகள் நடுவில் உயர்ந்த அரசாங்கம் போலவும், - நான்கு அண்ணன் தம்பிகளுக்குள்ளே வந்த மைத்துனனைப் போலவும், நாற்புறமும் வேளாண்மை சூழ்ந்த காட்டு மத்தியி லுயர்ந்த களத்து (சாலை) வீடு போலவும் அக்களத்து வாசலில் அறுவடைசெய்து அடித்துத் தூற்றிக் குவித்த தான்யராசி போன்றும் பலவிதத்திலும் அழகு பொலியக் காணப்படுகின்றது.

## தீர்த்தம்

இங்குள்ள சரவணப் பொய்கை என்னும் தடாகமானது முருகன் தனது கைவேலால் பாறையைக் கீறி உண்டாக்கியதாகும். நியமப்படி முழுகுபவர்களுக்கு வெளிநோயன்றி உள்நோயும் நீங்கும் முறையில் அமைந்திருக்கிறது. இடுப்பளவு தண்ணீரில் நின்று பஞ்சாக்கரத்தைப் பலதடவை யுச்சரித்துக்கொண்டு உடம்பு முழுதும் நீரில் மறையும்படி முழுகவேண்டும். தீர்த்தத்தில் உடம்பு மறைந்திருக்கும்போது இவ்வாறு நினைக்கவேண்டும். வெறும் நீருக்குள் நான் முழுகியிருக்கவில்லை. முருகன் வேல்வழியில் வந்த அவனது திருவருளில் மூழ்கிக் கிடக்கின்றேன் என்று நினைக்கவேண்டும். இப்படி 6 தடவைக்குக் குறையாது மூச்சு (கும்பகம்) கொள்ளுமளவு தியானம் செய்து முழுகவேண்டும்.

தீர்த்தத்திலேயே நின்று சூரியனை நோக்கி இரு கையையும் சேர்த்து ஜலத்தை அள்ளி "முருகனே இஃது உனக்காகட்டும்" என்று பொழுதை நோக்கி 6 கை ஜலம் விடவேண்டியது. இப்படி ஒரு வருடமோ அல்லது மாதக் கணக்கிலோ பக்தி பூர்வமாய் செய்துவந்தால் தீர்த்த மகிமை மற்றவருக்கு விளங்காவிட்டாலும் அனுபவித்த தனக்கு நேரில் உள்ளக் கண்ணுக்கு விளங்கிவிடும்.

## நற்கீரர் திருந்திய விதம்

நற்கீரர் என்றும் மதுரைத் தமிழ்ச் சங்கப் பெரும் புலவர் ஒருவர் மனிதரில் பாண்டியனையும் தேவரில் மகா தேவனையும் தவிர மற்றையோரைப் பாடுவதில்லை என விரதங் கொண்டதுபோலிருந்தார்.

இக்கொள்கை நேரியதாயிருந்தாலும் சிவாக்கினியின் பூரண அம்சமான சிவக்கொழுந்துதான் முருகன். முருகனைப் பாடுவது மகாதேவனையே பாடுவதாகும், என்பதைத் தெரியாமலிருந்ததுதான் அவரது கொள்கையில் சிறிது குறையாக இருந்தது. இக்குறையை எல்லார்க்கும் நீக்கவேண்டி நற்கீரருக்கென ஒரு விசேஷ நிகழ்ச்சி சரவணத் தீர்த்தத்தில் நடந்தது.

இவர் சரவணத் தீர்த்தமாடிக் கரையில் சிவபூஜை செய்துகொண்டிருந்தார். சிவபூஜையில் கரடி நுழைந்தது போல அக்கரையிலுள்ள கல்ப விருக்ஷத்தின் ஓர் இலையானது பூஜை செய்யும் அவர் முன்பாக நீர் ஓரமாய் விழுந்தது.

அம்மரத் தழை நீரில் விழுந்தால் மீனாகி உடனே பொய்கையின் உள்ளே போய்விடும். கரையில் விழு மானால் பறவையாக அமைந்து வானத்தில் பறந்துவிடும்.

இந்த நிலையில் சிவபூஜை செய்யும் நற்கீரர் முன்பாக விழுந்த இலை ஜலத்தோரம் விழுந்து நீரில் பாதி கரையிற் பாதியாகக் கிடந்தது. கரைப்பகுதி பறவையாகவும் நீர்ப் பகுதி மீனாகவும் அமைந்துவிட்டன. கூடா நட்பினர் இருவர் மேலும் கீழும் இழுத்துக்கொண்டு ஓயாது அல்ல லுறுவதுபோல மீன் கீழும் பறவை மேலுமாக தொந்தர வடைந்தன. புலவர் சிவபூஜா துரந்தரர் மாத்திரம் அல்லர், பரம கருணையுடையவருங்கூட, இத்துன்பத்தைக் கண்டு சும்மாயிருக்க, இவர் மனம் சகிக்கவில்லை. சிவபூஜையை விட இவர் படித்த சாஸ்திரம் சகிக்கவில்லை. அது சொல்லு கின்றது சிவபூஜையை இடையில்விட்டால் சாபங் கொடுப் பேன். பெருங் கெடுதியுண்டாகும் என்கின்றது.

அஹிம்ஸா தத்துவத்தைக் கைக்கொண்டவன் தனக்குவரும் கெடுதியைக் கவனிக்கமாட்டான். பிறர் துக்கத்தை நீக்கத் தன்னாலியன்றதைச் செய்தே தீருவான். தனக்கு நரகம் வந்தாலும் வரட்டும் என்று கோபுரத்தின் மீது உயர ஏறி, உலகம் உய்ய, உயர்ந்த குரலில் அட்டாக் கர மந்திரத்தை அனைவரும் கேட்க அன்போடு சொன்ன பெருமகனும் உண்டல்லவா?

இந்த நிலையில் சிவபூஜை நின்றாலும் மீண்டு பிராயச் சித்தம் செய்துகொள்ளலாம். சீவன் ஹிம்சைப்பட வேண்டாம் என்று கருதி திடுக்கென எழுந்து ஒரு

கோலால் இரண்டின் தொடர்பையும் நீக்கிவிட்டார். அவ்விரண்டும் துடித்து அடித்துக்கொண்டு கதறிப் பதறி இறந்துவிட்டன.

இச்சம்பவம் முருகன் திருவருள் நோக்கத்தில் நடப்பதாதலால் புலவர் நன்மைசெய்தும் தீமை செய்தது போல முடிந்தது. அஹிம்சை செய்தும் ஹிம்சையாக நேர்ந்தது.

சிவபூஜையை இடையில் விட்ட குற்றம் ஒன்று, பூஜா காலத்தில் உயிர்க்கொலை செய்தது மற்றொன்று ஆக இரண்டு குற்றம் ஏற்பட்டன.

இதற்குத் தண்டனையாக ஓர் பெரும்பூதம் வந்து நற்கீரரைப் பிடித்து இம்மலையிலுள்ள ஒரு பெருங் குகையில் சிறைவைத்துப் பெரியதோர் பாறுங்கல்லைக் கொண்டு ஊழிபெயரினும் பெயராதவாறு குகை வாயிலை அடைத்துவிட்டது.

புலவர் பெருமானது புலமை நீர்பூத்த நெருப்புப் போல் அடங்கியிருந்தது, "சிவனுக்கும் குகனுக்கும் பேத முண்டு" என்னும் அறியாமையாகிய சாம்பல் மூடிக் கொண்டிருந்தது. சிறைவாசமென்னும் காற்றடித்ததால் அவ்வறியாமை யென்னும் சாம்பல் பறந்து போயிற்று.

உடனே முருகனும் சிவமே எல்லாமும் சிவமே "எல்லாம் சிவம் என நின்றாய் போற்றி" (அப்பர்) "யானும் நீதானே யாவையும் மெய்யே" (நம்மாழ்வார்) ஏதத் ஆத்மியம் இதம் ஸர்வம் இத்யாக பரமாத்வயம் என்னும்

சர்வானன்ய பரமாத்வைத சுயஞ்ஜோதி ஞானச் சுட ரானது புலவர்பெருமான் நக்கீரரது இதயக் குகையில் சிறைக்குகையும் அண்டமும் அண்ட முகடும் அண்ட கோளங்களும் கடந்து, அப்பாலும் ஓங்கி வளரலாயிற்று.

புலவர் பெருமானது ஞானக்கினியினின்றும் "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாங்கு" "புலவரேறே— அரும்பெறள் மரபில் பெரும் பெயர் முருகா-பெரியோரேத்தும் பெரும்பெயர் இயவுள்-நின்னளந் தறிதல் மன்னுயிர்க்கு அருமை" — என்பன முதலிய அறிவுப் பொறிகள் எண்டிசையும் பறக்கலாயின.

இதைக் கண்டதும் தன்கருத்து முற்றியதைக் கண் டான் முருகன். இதற்குள் வேலாயுதம் வந்து பாறையை நீறாக ஆக்கி சிறையை விடுவித்தது. வேலாயுதமானது நேற்று மூடிய கற்சிறையை மாத்திரம் உடைத்துத் தகர்த் தெறியவில்லை. அனாதியே புலவரை மூடிய இதயச் சிறை யாம் அஞ்ஞானக் கருங்கற்பாறையையும் அதே கணத்தில் உடைத்துத் தகர்த்தெறிந்துவிட்டது.

வேற்கையோடும் அபயகரத்தோடும் தேவர்பெருமா னும் முன் தோன்றினர். புலவர் பெருமானும் தொழு தார்; அழுதார்; கும்பிட்டார்; கூத்தாடினர்; சூழ்ந்தார்; சுற்றினர்; வாய்விட்டரற்றி தமிழ் மொழியில் வற்றாத ஊற்றாகத் திருமுருகாற்றுப் படையையும் பாடி முடித் தார்.

பின் எம்பெருமானிடத்து தீர்த்த மஹிமை முதலிய வற்றையும் கேட்டு அவ்வாறே சரவணப் பொய்கையில்

முழுகி ஜபித்து பூஜித்து வேண்டிய நலன்களை வேண்டிய படி பெற்றார். தமிழ்நாடு வளரத் தம் புகழை வளர்த்து தென்றிசை இமயமெனத் திகழ்ந்து நின்றனர்.

இப்படியே பராசபுத்திரர் முதலியோரும் இத்தீர்த் தத்தில் முழுகியிருந்து ஜபித்து வழிபட்டு தீமையின் னீங்கி நன்மையடைந்தனர்.

தற்போதும் பல்லாயிரம் மக்கள் இத்தலத்தில் மூர்த்தி தீர்த்த வழிபாடுகளைச்செய்து விரும்பிய பயனைப் பெறு வதைக் கண்கூடாகக் காணலாம்.

பொதுவாக் மூர்த்தி தல தீர்த்த வழிபாடுகளெல்லாம் முக்கரணமும் ஒன்றுபட்டு நிற்பவருக்கே பயனளிப்பன வாகும். முக்கரணமென்பது மனம், வாக்கு, காயமென்ப தாம். இந்த மூன்றும் வழிபாடு காலங்களில் ஒன்றுபட் டிருக்கவேண்டும்.

மூர்த்தியை தரிசனம் முதலாக வழிபடும்போதா யினும் சரி, தீர்த்தத்தில் முழுகும்போதாயினும் சரி மனம் முதலிய மூன்றும் ஒன்றுபட்டிருக்கவேண்டும்.

சரவணத்தில் மூழ்கிச் சரவணத்திலேயே எழுந் திருப்பவரும் உண்டு. இப்படியல்லாமல் சரவணத்தில் முழுகிக் கடையிலும் புறவடையிலும் வீட்டு நடையிலும் எழுந்திருப்பவரும் உண்டு.

சில ஜனங்கள் திருப்பரங்குன்றத்திற்கோ, மதுரைக் கோ வந்து நல்ல தீர்த்தமென்று சரவணப்பொய்கை

யிலோ பிரம தீர்த்தத்திலோ அல்லது பொற்றாமரையிலோ முழுகுவார்கள். ஆனால் முழுகி எழும்போது காட்டிலோ கரையிலோ வயலிலோ மாட்டுத் தொழுவத்திலோ கடையிலோ எழுவார்கள். ஒருவனுக்கு உடம்பு தீர்த்தத்திற்குள்ளும் மனமானது "மாடு ஈனும் தருவாயிலிருந்ததே என்ன கன்று போட்டதோ? எப்படிப் போட்டதோ" என்று மாட்டுத் தொழுவத்திலும் இருக்கும். இப்படியாக அவனவன் குறித்ததில் மனம் போய்விடுமானால் வெற்றுடம்பு நீரில் கிடந்து ஆவதென்ன? அப்போது மனமில்லாத உடம்பு கிடப்பது அந்நீரில் தவளையும் மீனும் கிடப்பதற்குச் சமானமேயாகு மல்லவா?

தவளையும் மீனும் அந்தத் தீர்த்தத்தில் முழுகுகின்றன. இவனும் முழுகுகிறான். அதற்கும் சரவணப் பொய்கை இத்தகைய மகத்துவம் பொருந்தியதென்ற எண்ணமில்லை. இவனுக்கும் அப்போது அந்த எண்ணமில்லை. இருந்த எண்ணமும் காடு வீடு மேடுகளுக்குப் போய்விட்டது. ஆதலால் விசேஷ புண்ணியத்தையடைய இவனுக்கு வழியில்லாமல் போகின்றது.

இருந்தாலும் உடம்பளவு புண்ணியம் உண்டு. மனமில்லாது போய்விட்டாலும் முழுப்பயனற்றுப் போய்விடாது. மனமும் முழுகும்போது உடம்போடு கூடவிருந்தால் மிகுந்த புண்ணியத்தை விரும்பியபடியில் பெறமுடியும் என்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும்.

முனிமொழியாம் தமிழ்மொழிக்கு நாயகனாகிய நம்மாழ்வார் "உணர்ந்துணர்ந் துணரினும் இறைநிலை உணர்வரிது உயிர்காள்" என்றும், திருவாசகத்திலும் "தேவரும் அறிகிலர் யாவர் மற்றறிவார்" என்றும், நக்கீரரும் "நின்னளந் தறிதல் மன்னுயிர்க்கு அருமை" என்றும் இப்பெருமக்களே இவ்வாறு கூறியிருக்கும்போது நாம் முருகனைப்பற்றிச் சொல்வது, அவன் தீர்த்தமாதி

மகிமைகளைச் சொல்வது என்பது ஆகக் கூடிய காரியம் அல்ல.

அப்படியும் சொன்னாலும் நம் புத்தியளவுக்குத்தானே எடுக்கமுடியும். நடுக்கடலிலேயே கொண்டுபோய் இவனை விட்டாலும் கையிலிருப்பது உழக்கானால் அது படி முகந்து கொண்டு வருமா? இதனால் கடலில் அதிக நீர் இல்லையென்று சொல்லலாமா? அல்லது கிணறு, குளம், ஏரி மூன்றுக்கும் மூன்றுபேர் உழக்குக்கொண்டு நீர் மொண்டு வந்ததால், மூன்றும் சமமாயிருக்கக்கண்டு அந்த மூன்றும் ஓரளவுள்ளதுதான் என்று சொல்லமுடியுமா? இல்லை.

ஆதலால் ஏதோ சிறிதளவு எடுத்துக்கொள்ளப்பட்டது. அதுவே நம்மளவில் பெரிய இமயமலைபோலாகி விட்டது. அதையும் ஓரளவுக்குத் தாட்டிவைத்த முருகன் திருவருளையும் பல்லாற்றானும் உதவிய புலவர் பெரு மக்களையும் நண்பர் பெருமக்களையும் இன்னும் இத்தகைய நூற்களைச் சலியாமல் எழுதும்படி ஓய்ந்து கிடந்த என்னை எடுத்து ஊக்கமளித்தல் என்னும் கயிறுகொண்டு அதிக நேரம் சாயாது ஆடும்படி ஆட்டிவிட்ட நற்பெருமக்களை யும் ஓயாது நினைந்து நினைந்து உள்ளத்தால் வழுத்து வதைத் தவிர வேறு என்ன பதிலுபகாரம் நம்மால் செய்ய விருக்கின்றது?

வாழ்க நலம்—வீழ்க துயர்
ஆழ்க அமர்—சூழ்க சுகம்.

முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
தன்னை யார்எனில் தானோர் தலைமகன்
என்னை யாளும் இறைவன் எம்பிரான்
[illegible] பேரெயி லாளனே.

முற்றிற்று.



## ஆசிரியரின் மற்ற வெளியீடுகள்.

---

1. மனித இயல்பு ரூ. 1—0—0
   (பேய் மனிதன், மிருக மனிதன், தேவ மனிதன். மனிதலக்ஷணம்—முக்குற்றம்—பரிகாரம்)

2. ஏழை பங்காளன் ரூ. 1—0—0
   (இதில் மதுரை பிட்டுவாணிச்சிபம்மாளின் பக்தி—கடவுள் ஓட்டவேஷம் போட்ட காரணம்—ஓட்டர்(போயர்) பெருமை— இன்றுவரை காணாததைக் கண்டு, அதில் தன்னைக் காணும் தியானம் முதலியன நன்கு விளக்கப்பட்டுள்ளன.)

3. திருப்பரங்குன்றம் ரூ. 0—6—0
   (இதில் மூர்த்திகள் அமைப்பு குடும்ப ஒற்றுமை சகோதர ஒற்றுமை. வெளித்தராசு—உள் தராசு—நிறுக்கும் விதம். நக்கீரர் திருத்திய விதம் ஜபிக்கும் முறை—தீர்த்தம் முதலியன.)

4. பரமாத்வைத சித்தாந்தம் ரூ 4—0—0

5. ஊசி நுனிப் புத்தியும்—உலக்கை நுனிப் புத்தியும் ரூ. 0—8—0
   சிலகுறளின் துணை கொண்டு ஒரு குறளின் விரிவுரை— நுண்மாண்நுழைபுலம்)

---

கிடைக்குமிடம்:—

(ஆசிரியர் விலாசம்) வடக்காடி வீதி, வாசகசாலை மதுரை.

இ. மா. கோபாலகிருஷ்ண கோன் புக்ஷாப், மதுரை.

டி. ராமசுப்பு, தேங்காய் பழ வியாபாரம்,
சந்நதிதெரு, திருப்பரங்குன்றம்.

ராஜன் பப்ளிஸிட்டி, 44, லக்ஷ்மிபுரம் 6-தெரு, மதுரை.